# திருவெழு கூற்று இருக்கை

திருஞானசம்பந்தர் அருளியது





வெளியீடு :

சைவசித்தாந்த நேர்முகப் பயிற்சிமையம்

(நெய்வேலி கிளை)

பன்னிரு திருமுறை வளர்ச்சிக் கழகம்,

D-29, மணிமேகலைச்சாலை, வட்டம் - 16,

நெய்வேலி - 607 803.

# திருவெழு கூற்று இருக்கை

(திருஞானசம்பந்தர் அருளியது)







-: பதிப்பாசிரியர் :-

செந்நெறிச் செல்வர் மெய்ஞ்ஞான வள்ளல்

திரு. கு. வைத்தியநாதன்

(இயக்குநர், திருவாவடுதுறை ஆதீன

சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம்,

திருவிடைமருதூர்.)


இதில் வரும் விற்பனைத் தொகையை அடுத்த பதிப்பிற்குபயன்படுத்திக் கொள்ளப்படும். விலை 1—50


புத்தகம் கிடைக்குமிடம் :-

சைவ சித்தாந்த நேர்முகப்பயிற்சி மையம்,

பன்னிருதிருமுறை வளர்ச்சிக் கழகம்,

D. 29 மணிமேகலைச் சாலை, வட்டம் - 16.

நெய்வேலி - 607 803.

# திரு எழு கூற்று இருக்கை

'செந்நெறிச் செல்வர்' 'மெய்ஞ்ஞான வள்ளல்'
— திரு. கு. வைத்தியநாதன் —
(இயக்குநர், திருவாவடுதுறை ஆதீன சைவசித்தாந்த
நேர்முகப் பயிற்சி மையம், திருவிடைமருதூர்.)

**தோற்றுவாய் :**

திருஞானசம்பந்தப் பெருமானின் தந்தையார் சிவபாத இருதயர், தனயனர் அருளிச் செய்த அனைத்துப் பதிகங்களையும்அன்ருடம்படனம்செய்துவந்தார். முதுமை காரணமாக, அனைத்தையும் ஒரே நாளில் ஓதஇயலாமை குறித்துச் சம்பந்தப் பெருமானிடம் கூறினர். அப்போது சம்பந்தப் பெருமான் ஓர் அருமைப் பதிகம் அருளிச் செய்து அஃது ஒன்றினை மட்டும் ஓதினல், தமது அனைத்துப் பதிகங்களையும் ஓதியதற்குச் சமமாகும் என்று கூறித் ''திருஎழுகூற்று இருக்கை'' என்னும் பதிகத்தை அருளிச் செய்தார். இதனைச் சேக்கிழார் பெருமான்,

''எந்தைக்கு எழுகூற்றிருக்கை மூல இலக்கியமாக
எல்லாப் பொருள்களும் முற்ற ஞாலத்து உயர்
காழியாரைப் பாடினர் ஞானசம்பந்தர்'' (277)

என்றருளிச் செய்துள்ளார்.

**பதிக அமைப்பு :**

இப்பதிகத்தில் ஒன்று இரண்டு ஒன்று - ஒன்று இரண்டு, மூன்று, இரண்டு, ஒன்று - என்று இங்ஙனம் ஒன்று முதல் ஏழு முடியப் படிப்படியாக, ஒவ்வொன்ருக ஏறியும் இறங்கியும் இவ்வாறு ஏழு கூறுகளிலும் எண்கள் உள்ளன. இஃது ஏழு கூறுகளாக அமைந்திருத்தலால் ஏழு கூற்றிருக்கை எனப் பெயர் பெற்றது. இதனைச் 'சித்திரக்கவி' களுள் ஒன்று எனக் கூறுவர். தேர் ஒன்றின் மேல் பரப்புப் போல் இஃது அமைந்து உள்ளது. இதன் அமைப்பு முறை வருமாறு.

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | 1 | 2 | 1 | | | | | |
| | | | | 1 | 2 | 3 | 2 | 1 | | | | |
| | | | 1 | 2 | 3 | 4 | 3 | 2 | 1 | | | |
| | | 1 | 2 | 3 | 4 | 5 | 4 | 3 | 2 | 1 | | |
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 | |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 6 | 5 | 4 | 3 | 2 | 1 |

இதன் கண் அறுபத்தொன்று அறைகள் இருப்பதைக் காணலாம். இதனைத் 'தேர்ப்பந்தம்' (இரதபந்தம்) என்பர். நமது உடலைத் தேருக்கு ஒப்பாகக் கூறுவர். எனவே இப்பதிகத்தை அன்றாடம் படனம் செய்து வருபவருக்கு எந்தவித உடற்பிணியும் நேராது என்பது உண்மை.

**பதிகச்சிறப்பு :**

இப்பதிகத்தைத் திருஞான சம்பந்தப் பெருமான், இறைவனை முன்னிலைப் படுத்திப் பாடியருளியுள்ளார். இதில் இறைவனின் எண்ணற்ற ஆற்றல்கள் கூறப் பட்டுள்ளன. சீகாழிப் பதியின் பன்னிரு திருப்பெயர்களும் இதன்கண் இடம் பெற்றுள்ளன. இதனைப் படனம் செய்யும் போது, எல்லாம் வல்ல சிவபெருமான் நம்முன் எழுந்தருளிச் செய்து நமக்கு அருள் வழங்குவதை, நாளடைவில் படனம் செய்து வரும் போது உணரலாம்.

**பதிகப்பொருள் :**

இப்பதிகத்திற்குத் தருமையாதீனப் பதிப்பில், திருவாவடுதுறைஆதீனமகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் அரியதோர் உரை எழுதியுள்ளார்கள். அதனை ஒட்டி, மேற்குறிப்பிட்ட எண்களின் அடிப்படையில் இக்கட்டுரையில் பொருள் கூறப்பட்டுள்ளது. இதனைக் கற்பவர்களுக்குத் திருவெழுகூற்றிருக்கையின் அருமை புரியும் பொருட்டு இவ்வாறு பொருள் கூறப்படுகின்றது. அது வருமாறு.

முதல் அறை :

1 **ஓர் உரு ஆயினை** — முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து தத்துவாதீதனாக நிற்கும் சிவபெருமானே, உயிர்கள் உய்யும் பொருட்டு, உன் இச்சாசத்தியால் ஐந்தொழில் ஆற்றுவதற்காக, நீயே திருமேனி கொண்டருளினாய்,

2 **மான்ஆங்காரத்து, ஈர் இயல்பாய்** — ஐந்தொழில் ஆற்ற வேண்டி, உன் அருளாற்றலைக் கொண்டு, சிவம் சக்தி ஆகிய இரு வடிவங்களை உடையன் ஆயினாய்,

இரண்டாம் அறை :

1 **விண் முதல் பூதலம் ஒன்றிய** — ஆகாயம் முதல் பிருதி வரையுள்ள பஞ்ச பூதங்களையும் ஒரு நிலைப்படுத்தி,

2 **இருசுடர் உம்பர்கள் பிறவும் படைத்து அளித்து அழிப்ப** — சூரியன், சந்திரன் முதலிய தேவர்களையும் மற்றுள்ள ஆன்மாக்களையும் உருவுடையவர்களாகப் படைத்துக் காத்து, ஒடுக்கும் பொருட்டு,

3 **மும்மூர்த்திகள் ஆயினை** — அயன், மால், உருத்திரன் என்னும் மூவர் ஆகி, நீயே நின்றாய்,

2 **இருவரோடு** — அயனையும் மாலையும் இடத்திலும் வலத்திலும் முறையே அடக்கிக்கொண்டு,

1 **ஒருவன் ஆகி நின்றனை** — 'திரிமூர்த்தி' ஆகி நீ ஒருவனே நின்றாய்,

மூன்றாம் அறை :

1 **ஓர்ஆல்நீழல்** — கல்லாலமரத்தின் நிழலில் எழுந்தருளி இருந்து,

2 **ஒண் கழல் இரண்டும்** — ஒளி உமிழும் உன் இரண்டு பாதங்களையும்,

3 **முப்பொழுது ஏந்திய** — அதிகாலை, நண்பகல், அந்திப் பொழுது ஆகிய மூன்று, காலங்களிலும் வழி படுகின்ற,

4 **நால்வர்க்கு ஒளி நெறி காட்டினை** — அகத்தியன், புலத்தியன், சனகன், சனற்குமாரன் என்னும் நான்கு முனிவர்களுக்கும், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு மறைகளை, வாக்கு இறந்த பூரணமாய் நின்று விளக்கி அருளினுய்,

3 **நாட்டம் மூன்ருகக் கோட்டினை** — அக்கினி, சூரியன் சந்திரன் ஆகியவற்றை மூன்று கண்களாகக் கொண்டருளி, ஆன்மாக்களை மறைத்திருந்த ஆணவவல் இருளை ஓட்டினுய்.

2 **இருநதி அரவமோடு** — பெரிய நதியாகிய கங்கையை யும் பாம்பையும்.

1 **ஒரு மதி சூடினை** — பிறைச் சந்திரனையும் சூடினுய்.

நான்காம் அறை :

1 **ஒரு தாள்** — 'பிரணவம்' ஆகிய ஒரு காம்பினையும்,

2 **ஈர் அயில்** — சொரூபம் (சிறப்பு) தடத்தம் (பொது) எனப்படும் இரு இயல்புகளையும்.

3 **மூ இலை சூலம்** — அயன், மால், உருத்திரன் என்னும் மூவரையும் மூன்று இலைகளாகக் கொண்டுள்ள சூலாயுதத்தையும்,

4 **நால்கால் மான் மறி** — நான்கு மறைகளையும் (வேதம் நான்குகால்களாகக்கொண்டுள்ளமான்கன்றினையும்,

5 **ஐந்தலை அரவம் ஏந்தினை** — 'சிவாயநம' என்னும் திரு வைந்தெழுத்துக்களையும் ஐந்து தலைகளாகக் கொண் டுள்ள பெரிய நாகத்தைக் கையில் தரித்தருளி யுள்ளாய்.

4 **காய்ந்த நால் வாய்** — தன் நிழலைக்கண்டு வெறுத்துச் சீறும் தொங்குகின்ற வாயையும்.

3 **மும்மதத்து** — காமம். வெகுளி, மயக்கம் என்னும் மூன்று விகாரங்களையும்,

2 **இருகோட்டு** — யான் - எனது என்னும் செருக்கைக் குறிக்கும் இரண்டு தந்தங்களையும் உடைய.

1 **ஒரு கரி ஈடு அழித்து உரித்தனை** — யானையின் மமதை யை ஒழித்து அதன் தோலினை உரித்துப்போர்த்தினுய்

ஐந்தாம் அறை :

1 ஒரு தநு — பொன்மலை ஆகிய வில்லினது,

2 இரு கால் வளைய வாங்கி — இரண்டு முனைகளையும் வளைத்து வைத்து, அத்திரத்தைத் தொடுத்து,

3 முப்புரத்தோடு அவுணரை — மூன்று நகர்களுக்கும் அதிபர்கள் ஆகிய அவுணர்களை,

4 நால் நிலம் — உலகம் முழுவதும்,

5 அஞ்சக் கொன்று தலத்து உற — அஞ்சும் படியாகக் கொன்று தரையில் விழும்படி,

6 அறுத்தனை — ஆறு துண்டுகள் ஆக்கி அழித்தனை,

5 ஐம்புலம் — காண்டல், கேட்டல், உண்ணல், உயிர்த்தல், உற்றறிதல் எனப்படும் ஐந்து புலன்களையும்,

4 நாலாம் அந்தக்கரணம் — மனம், புத்தி, அகங்காரம் சித்தம் என்னும் உட்கருவிகள் நான்கினையும்,

3 முக்குணம் — சத்துவம், இராசதம் என்னும் மூன்று குணங்களையும்,

2 இருவளி — பிராணன், அபானன் என்னும் இரண்டு வாயுக்களையும்,

1 ஒருங்கிய வானோர் ஏத்தநின்றனை — மூலாதாரத்தில் ஒடுக்கிக்கொண்டு, ஒருமையுடன் நின்திருவடியையே நினைந்து மேலோர் வழிபடும்படி நின்றாய்

ஆறாம் அறை :

1 ஒருங்கிய மனத்தோடு — உலகியல் இன்பத்தில் செல்லும் மனத்தை ஒருநிலைப்படுத்தி,

2 இருபிறப்பு ஓர்ந்து : — அன்னையின் வயிற்றிலிருந்து பிறந்த உலகியல் பிறப்பையும், சமய தீக்கை பெற்ற பின்பு உண்டாகும் இறையியல் பிறப்பையும் சிந்தித்து

3 முப்பொழுது குறை முடித்து — காலை, நண்பகல், மாலை என்னும் மூன்று காலங்களிலும் அனுட்டானம் ஜெபம், தியானம் என்பனவற்றை நிறைவு செய்து,

4 **நான்மறை ஓதி** — அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு வேதங்களின் சாரம் ஆகிய திருமுறைகளைப் படனம் செய்து (பாராயணம்)

5 **ஐவகை வேள்வி அமைத்து** — சிவ பூசை, குரு பூசை, மாகேசுவர பூசை, சிவாசாரியர்க்கு அமுது, அதிதி புசிப்பு என்னும் ஐந்து கடமைகளை மேற்கொண்டு;

6 **ஆறு அங்கம் முதல் எழுத்து ஓதி, வரன்முறை பயின்ற** — ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல் ஈயச் செய்தல் என்னும் ஆறு தவங்களைச் செய்து முதல் ஆகிநிற்கும் பிரணவ மந்திரத்தை ஓதி, உனது பெருமையை நினைந்து வழிபடப் பெறுகின்ற.

7 **எழு வான்தனை வளர்க்கும் பிரமபுரம் பேணினை** — புவர் லோகம், சுவர்லோகம், மகர்லோகம், சனலோகம், தவலோகம், சத்தியலோகம், பூலோகம் என்னும் ஏழு உலகங்களைக் காத்து நிற்கும் ''பிரமபுரத்தில்'' அமைந்தனை.

6 **அறுபதம் முரலும் 'வேணுபுரம்' விரும்பினை** — ஆறுகால்களை உடைய வண்டுகள் இசைபாடும் பொழில் சூழ்ந்த ''வேணுபுரம்'' என்னும் திருத்தலத்தில் எழுந்தருளினை.

5 **இகலி அம் ஐந்து உணர் புகலி அமர்ந்தனை** — அழகிய தாமரைப் பூ, மாம் பூ, அசோகம் பூ, முல்லைப் பூ, நிலோற்பலப் பூ, என்னும் ஐந்து மலர்களாகிய மன்மத பாணத்தை, முன்பு அமரர்கள் உன்மீது எய்தச் செய்து, உன்னிடமிருந்து வேறுபட்டு நின்றனர்; பின்னர் ' நீயே புகல்' என்று உணர்ந்து உன்னைச் சரண் அடைந்தபோது ''திருப்புகலியில்'' எழுந்தருளினை.

4 **பொங்கு நால் கடல் சூழ் ''வெங்குரு'' விளங்கினை** — அலை பாயும் கடல்களைப் போல, கற்கக் கற்கப் பொருள் விளங்கும் நான்கு வேதங்களையும் தேவர்களுக்கு அருளி, அவர்களது குரு ஆகிய பிரகஸ்பதிக்கும் குருவாக ''வெங்குரு'' என்னும் பெரும் பதியில் விளங்கிநின்றாய்.

3 **பாணி மூ உலகும் புகைய, மேல் மிதந்த ''தோணிபுரத்து'' உறைந்தனை** — பூமி, அந்தரம், சுவர்க்கம். என்னும் மூன்று உலகங்களும் பேரூழிக் காலத்தில் நீரில் மூழ்கும் போது. ஒரு தோணி அமைத்து, நீ அதில் அமர்ந்து, ''திருத்தோணிபுரம்'' என்னும் திருத் தலத்தைத் தோற்றுவித்து அதன்கண் வீற்றிருந்தாய்

2 **தொலையா இருநிதி வாய்ந்த ''பூந்தராய்'' அமர்ந்தனை** — என்றும் வற்றாத சங்கநிதி. பதுமநிதி என்னும் இரு நிதிகளை வேண்டி யார்க்கு வேண்டியவாறு ஈந்து அருளும் ''திருப்பூந்தராய்'' என்னும் திருத்தலத்து எழுந்தருளினை.

1 **வரபுரம் ஒன்று உணர் ''சிரபுரத்து'' உறைந்தனை** — பல்வேறு பிறப்புக்களில் உழன்று உழன்று வந்துள்ள உயிர். உணர்ந்து உன்னிடம் வேண்டும் வரம் 'ஒன்றே' உள்ளது; அஃது உனது திருவடிப்பேறு ஆகும்; அஃதொன்றையே விரும்பும் ஆன்மாக்களுக்கு அதனை வழங்கும் பொருட்டுத் ''திருச்சிரபுரம்'' என்னும் திருப்பதியில் எழுந்தருளியிருக்கின்றாய்.

குறிப்பு : பல பதிப்புக்களில் 'வரபுரம் என்றுணர்' என்று உள்ளது. இவ்வாறு இருப்பது, எழுகூற்றிருக் கைக்குப் பொருந்துமாறில்லை.

ஏழாம் அறை :

1 **ஒரு மலை எடுத்த** — கயிலாய மலையை அசைத்த.

2 **இருதிறல் அரக்கன் விறல் கெடுத்து அருளினை ''புறவம்'' புரிந்தனை** — இரு தோள்களிலும் வலுமிகுந்த இராவணனின் செருக்கை அழித்து அவன் தனது தவறுக்காக வருந்தித் திருந்தியதும் அவனுக்கு அருள் புரிந்தாய்: புருவுக்கு அருளும் பொருட்டுத் திருப்புறவம் என்னும் திருத்தலத்தை அமைத்தனை.

3 **முந்நீர்த் துயின்றோன்** — ஆற்று நீர், ஊற்றுநீர், வேற்று நீர் என்னும் மூவகை நீர்களும் கலக்கும் கடலில் துயில் கொள்ளும் மாலும்.

4 **நான்முகன் அறியாப் பண்பொடு நின்றனே, "சண்பை" அமர்ந்தனே** — நான்கு முகங்களை உடைய அயனும் (திருமாலும்) உன் முடியையும் அடியையும் முறையே தேடியறிய மாட்டாமல் நின்றபோது, பெருங் கருணையோடு இலிங்கோற்ப வடிவில் நின்று அவர் களுக்குக் காட்சி கொடுத்தருளினுய்; துர்வாச முனிவ ருக்காகத் திருச்சண்பை என்னும் திருத்தலத்தில் எழுந்தருளினுய்.

5 **ஐ உறும் அமணரும்** — அறியாமல் வினவுதல், அறி வொப்பக்காணுதல், ஐயந்தீர்தல், அவனறிவு தான் கொள்ளல், மெய்காட்டல் என்னும் ஐந்து வகை வினக்களுக்கு விடை காணுமலிருக்கும் சமணர்களும்.

6 **அறுவகைத் தேரரும், ஊழியும் உணராக் "காழி" அமர்ந்தனே** — கைப்பு, புளிப்பு, கார்ப்பு துவர்ப்பு கூர்ப்பு, தித்திப்பு என்னும் ஆறுவகைச் சுவைகளையும் உச்சிப் பொழுதுக்கு முன்பே புசிக்கின்ற புத்தமதத்த வரும் பேரூழிக் காலத்திலும் இறைவனின் தன்மை யை அறிய மாட்டாதவர்களாவர். அவர்களது அறியாமையைப் போக்கும் பொருட்டுச் சீகாழி என்னும் திருப்பதியில் எழுந்தருளியுள்ளாய்.

7 **எச்சன் ஏழ் இசையோன் 'கொச்சை'' யை மெச்சினே** — பேரூழிக்காலத்தில் அனைத்தும் தன் வியாபகத்துள் ஒடுங்க, நீ ஒருவன் மட்டுமே என்றும் போல் எஞ்சி மாறுபடாது நிற்பாய். அதுபோழ்து, உலகத்துயிர் கள் உய்யும் பொருட்டு, ஏழிசையோடு கூடிய வீணையினை வாசிக்கின்றுய், பேரூழி முடிந்து ''கொச்சை'' என்னும் திருத்தலத்தில் படைத்தலைத் தொடங்கினுய்,

6 **ஆறு பதமும்** — பிரத்தி, பிரத்தியாகாரம், துல்லியம் துல்லியாதீதம், வித்தை, அவித்தை என்னும் ஆறு சொற்களும்.

5 **ஐந்து அமர கல்வியும்** — அரசன், குரு, தாய், தந்தை தமையன் என்னும் ஐந்து ஆசிரியர்களிடமிருந்து பெறும் கல்வியும்.

4 **மறைமுதல் நான்கும்** — அறம் பொருள் இன்பம், வீடு என்னும் நான்கு மறைகளும்.

3 **மூன்று காலமும் தோன்ற நின்றனை** — சென்றகாலம் நிகழ்காலம், வருங்காலம் என்னும் முக்காலமும் தோன்றும் படியாக அருளிச் செய்தனை,

2 **இருமையின் ஒருமையும்** — சிவமும் சக்தியும் ஆகிய தன்மையில் சிவம் ஒன்றே ஆய்,

1 **ஒருமையின் பெருமையும்** — சொருப நிலையில்தான் ஒரே தன்மை உடையவனாய்ச் சிறப்புடையவனாய்,

**மறுவிலா மறையோர் "கழுமல" முதுபதி** — மாசற்ற அந்தணர் வாழ்கின்ற வழியில் வந்த 'திருக்கழுமலம்' என்னும் பழம் பதியில்

**கவுணியன் கட்டுரை** — கவுணியர் குலத்தில் அவதரித்த ஆளுடைப் பிள்ளையின் பதிகச் சிறப்பை.

**கழுமல முதுபதிக்கவுணியன் அறியும்**-திருக்கழுமலத்தில் எழுந்தருளியுள்ள, 'கம்' என்னும் பிரம கபாலத்தில் உண்கின்ற பரம்பொருள் அறிவான்,

**அனைய தன்மையை ஆதலின்** — இப்பதிகம் அத் தன்மையது ஆதலின்,

**நின்னை நினைய வல்லவர் இல்லை நீள் நிலத்தே** — இதனைப் படனம் செய்வது வாயிலாக உன்னை நினைந்து உறுதியாக நிற்பவர்க்கு மறுபிறப்பு இல்லை என்பதாம்.

**பதிகப்பயன் :**

இத்துணைச் சிறப்பு மிக்க இப்பதிகத்தை நாள்தோறும் படனம் (பாராயணம்) செய்பவர்கள், இவ்வுலகில் பெற வேண்டிய பேறுகள் அனைத்தையும் பெற்றுச் சிவனுலகு எய்துவர் என்பது திண்ணம். அவர்களுக்கு 'மறுபிறப்பு இல்லை' என்பது சம்பந்தப் பெருமான் திருவாக்கு.

எனவே, இன்று முதல் நீங்களும் இப்பதிகத்தைப் படனம் செய்து, இம்மை மறுமை இன்பத்தைப் பெறுதற்கு எல்லாம் வல்ல சிவபரம்பொருளை வழுத்துகின்றேன்.

— சம்பந்தம் எம்பந்தம் —

உ

# திருவெழுகூற்றிருக்கை

பண் - வியாழக்குறிச்சி] [முதல் திருமுறை

திருச்சிற்றம்பலம்

ஒருரு வாயினை மானாங் காரத்து
ஈரியல் பாயொரு விண்முதல் பூதலம்
ஒன்றிய இருசுடர் உம்பர்கள் பிறவும்
படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை
இருவரோ டொருவ னாகி நின்றனை
ஓரால் நீழல் ஒண்கழல் இரண்டும்
முப்பொழு தேத்திய நால்வர்க் கொளிநெறி
காட்டினை நாட்ட மூன்றாகக் கோட்டினை
இருநதி அரவமோ டொருமதி சூடினை
ஒருதா ளீரயின் மூவிலைச் சூலம்
நாற்கால் மான்மறி ஐந்தலை அரவம்
ஏந்தினை காய்ந்த நால்வாய் மும்மதத்து
இருகோட் டொருகரி யீடழித் துரித்தனை
ஒருதனு இருகால் வளைய வாங்கி
முப்புரத் தோடு நானிலம் அஞ்சக்
கொன்று தலத்துற அவுணரை யறுத்தனை
ஐம்புலன் நாலாம் அந்தக் கரணம்
முக்குணம் இருவளி யொருங்கிய வானோர்
ஏத்த நின்றனை யொருங்கிய மனத்தோடு
இருபிறப் போர்ந்து முப்பொழுது குறைமுடித்து
நான்மறை யோதி ஐவகை வேள்வி
அமைத்தா றங்க முதலெழுத் தோதி
வரன்முறை பயின்றெழு வான்றனை வளர்க்கும்
பிரமபுரம் பேணினை
அறுபதம் முரலும் வேணுபுரம் விரும்பினை

இகலிய மைந்துணர்புகலி யமர்ந்தனை
பொங்குநாற் கடல்சூழ் வெங்குரு விளங்கினை
பாணிமூ வுலகும் புதையமேல் மிதந்த
தோணிபுரத் துறைந்தனை தொலையா இருநிதி
வாய்ந்த பூந்தராய் ஏய்ந்தனை
வரபுரம் ஒன்றுணர் சிரபுரத் துறைந்தனை
ஒருமலை யெடுத்த இருதிறல் அரக்கன்
விறல்கெடுத் தருளினை புறவம் புரிந்தனை
முந்நீர்த் துயின்றோன் நான்முகன் அறியாப்
பண்பொடு நின்றனை சண்பை யமர்ந்தனை
ஐயுறும் அமணரும் அறுவகைத் தேரரும்
ஊழியும் உணராக் காழி யமர்ந்தனை
எச்சனே ழிசையோன் கொச்சையை மெச்சினை
ஆறு பதமும் ஐந்தமர் கல்வியும்
மறைமுதல் நான்கும்
மூன்று காலமுந் தோன்ற நின்றனை
இருமையின் ஒருமையும் ஒருமையின் பெருமையும்
மறுவிலா மறையோர்
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக்க வுணியன் அறியும்
அனைய தன்மையை யாதலின் நின்னை
நினைய வல்லவ ரில்லைநீள் நிலத்தே

திருச்சிற்றம்பலம்





## பிழை திருத்தம்.

| பக்கம் - | வரி - | பிழை - | திருத்தம் |
|---|---|---|---|
| 3 - | 10 - | விடுப்பட்டுள்ளது. — | சேர்த்துக்கொள்ளவும். |
| 5 - | 16 - | தாமதம் — விடுபட்டுள்ளது | 1. ஒரு - அவ்வாறு சிவசத்தியாய் நின்றுலும் நீ ஒருவனே ஆகியுள்ளாய் சத்துவம், இராசதம் - என்பதனை அடுத்து தாமதம் என்பதனை சேர்த்துக்கொள்ளவும். |
| 7. - | 1 - | புகைய — | புதைய |
| 7 - | 1 - | தேரணி — | தோணி |
| 8 - | 32 - | அமர — | அமர் |
| 10 - | 2 - | பண் - வியாழக்குறிச்சி — | வியாழக்குறிஞ்சி |

திருவாவடுதுறை தினத் திங்கள் இதழ் ''மெய் கண்டார்''
அக்டோபர் - 1991 - இதழில் வெளியிடப்பட்டது.
நன்றி - "மெய் கண்டார்".

